# பகவத்  பாதை

Bagavath Path

தனிச்சுற்றுக்கு மட்டும் | இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு | 15-03-2013

## சக்தியா ? முக்தியா?

- ஸ்ரீ பகவத்



முக்தி நிலை என்பது ஓர் அனுபவன்று. நமது அனுபவங்களின் பிரவாகமே முக்தி நிலையாகும். அனுபவங்கள் எவ்வளவு உயர்வானதாக இருந்தாலும் சரி, அவை அனைத்தும் தோன்றி மறைய வேண்டியவையே.

- ஸ்ரீ பகவத்



நமக்கு என்ன தேவை? நாம் எதனை விரும்புகிறோம்?

ஒருவர் பணத்தை விரும்புகிறார்; இன்னுமொருவர் பதவியை விரும்புகிறார்.

"ஏன் அப்படி விரும்புகிறீர்கள்?" - என்று அவரைக் கேட்டால், அவர் என்ன சொல்லுவார்?

"பணம் எனக்கு மகிழ்வைத் தருகிறது", "பதவி எனக்கு மகிழ்வைத் தருகிறது".

- இப்படித்தான் கூறுவார்கள்.

உண்மையில் பணத்தை எவரும் விரும்புவதில்லை; பதவியை எவரும் விரும்புவதில்லை.

பணம் - பதவி என்ற பெயரில் மகிழ்ச்சியையே விரும்புகிறார்கள்.

"மகிழ்ச்சியை ஏன் விரும்புகிறீர்கள்?" - என்று கேட்டால் என்ன சொல்வார்கள்?

"மகிழ்ச்சி, எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. மகிழ்ச்சிக்காகவே, மகிழ்ச்சியை விரும்புகிறேன்." - இப்படித்தான் கூறுவார்கள்.

மகிழ்ச்சியை விரும்புவதற்கு எந்தக் காரணமும் தேவையில்லை.

மகிழ்ச்சி ஏற்படும்போது, நமக்குள் போராட்டம் எதுவும் இருப்பதில்லை. அதில் ஒரு நிறைவுத் தன்மை ஏற்பட்டுவிடுகிறது. தன்னை மறந்த ஒரு சாந்தி நிலை ஏற்பட்டுவிடுகிறது.

மகிழ்ச்சிக்கு எதிரானதுதான், துயரம் மற்றும் மனவேதனை.

வேதனையை நாம் விரும்புவதில்லை. வேதனையோடு சேர்ந்து போராட்டமும் ஏற்பட்டுவிடுகிறது. வேதனையில், நாம் நம்மை மறக்கமுடியாது. நமது போராட்டங்கள் யாவும் நம்மை நினைவூட்டிக் கொண்டே இருக்கின்றன.

மகிழ்ச்சியை விரும்புகிறோம். அது கிடைக்கிறது. இதில் ஒரு ஒழுங்குமுறை இருக்கிறது. விரும்பினோம் - கிடைத்தது.

ஆனால் மனவேதனையை எவரும் விரும்புவதில்லை. எவராவது மனவேதனையை விரும்புவார்களா? ஆனால் அதுதான் நம்மைத் துரத்துகிறது. ஏன் இப்படி?

மகிழ்ச்சிக்கும், மனவேதனைக்கும் ஆதாரம் ஒன்றே ஒன்றுதான். மகிழ்ச்சி ஒரு கிளையாகவும், மனவேதனை பிரிதொரு கிளையாகவும் உள்ளது. ஆனால் இரண்டு நிலைகளையும் தாங்கி நிற்கும் அடிமரம் மட்டும் ஒன்று தான்.

- அதுதான் எதிர்பார்ப்பு - Expectation.

எல்லோரும் செல்போன் வைத்திருக்கிறார்கள். ஓர் உதாரணம். ஆனால் உங்களால் ஒரு செல்போன்கூட வாங்க வசதியில்லை. செல்போன் மீது உங்களுக்கு ஆசை. இந்நிலையில் நண்பர் ஒருவர் செல்போன் ஒன்றை உங்களுக்குப் பரிசளிக்கிறார். உங்களுக்கு மகிழ்ச்சியோ மகிழ்ச்சி. எதிர்பார்ப்பு நிறைவேறியதால் மகிழ்ச்சி.

ஆனால் மறுநாளே எவரோ ஒருவர் உங்கள் செல்போனை களவாடிச் சென்று விடுகின்றார் அல்லது தொலைந்து போய்விடுகிறது. இப்போது உங்களுக்கு மனவேதனை. உங்கள் எதிர்பார்ப்பு பாதிக்கப்பட்டதால் வேதனை ஏற்பட்டுவிட்டது.

இந்த உதாரணத்தில் ஒருசிறிய மாறுதல்.

உங்களிடம் பதினைந்து செல்போன்கள் உள்ளன. ஒரே நேரத்தில் பல செல்போன்கள் ஒலிக்கும்போது, உங்களுக்கு அது தொந்தரவாகவே உள்ளது. செல்போன்களைக் குறைக்க முடிவு செய்கிறீர்கள். இந்நிலையில் உங்களது நண்பர் புதிதாக ஒரு செல்போனைப் பரிசளிக்கிறார். அது உங்களுக்கு மகிழ்ச்சியை அளிப்பதில்லை. ஏனென்றால், செல்போனை நீங்கள் எதிர்பார்க்கவில்லை. உங்களிடம் ஏற்கெனவே இருந்த ஒரு செல்போன் தொலைந்து போனால் கூட நீங்கள் வருத்தப்படமாட்டீர்கள்.

எதிர்பார்ப்பு இருந்தால் தான் மகிழ்ச்சியும் ஏற்படும்; மனவேதனையும் ஏற்படும்.

மனவேதனையினால் பாதிக்கப்படும் பலரும்

"மகிழ்ச்சி இல்லாவிட்டாலுங்கூட பரவாயில்லை; மனவேதனை இல்லாமலிருந்தால் போதும்"

- என்ற நிலைமைக்கு வந்துவிடுகின்றனர்.

மனவேதனையை நிர்ணயிப்பது எது?

எதிர்பார்ப்பு இல்லாத நிலையில் மனவேதனை கிடையாது. எதிர்பார்ப்புக்கு விரோதமாக எது நிகழ்ந்தாலும் அது மனவேதனையையே ஏற்படுத்துகிறது. எதிர்பார்ப்புதான் நமது மனவேதனையைத் தீர்மானிக்கிறது. Expectation is the deciding factor of our sorrow.

எதிர்பார்ப்புதான் காரணம். எதிர்பார்ப்பு இல்லாமலிருந்தால் பிரச்சினைகளே இருக்காது; முரண்பாடுகளே இருக்காது; மனவேதனையே இருக்காது. ஆனால் - எதிர்பார்ப்பு எதுவும் இல்லாமல் இருக்க வேண்டும் என்பதே ஓர் எதிர்பார்ப்பாக அமைந்துவிடுகிறது.

எதிர்பார்ப்பை எவ்வாறு தான் நிர்வாகம் செய்வது?

நாம் எல்லாவற்றையும் எதிர்பார்ப்பதில்லை. இன்பந்தருபவற்றை மட்டுமே நாம் எதிர்பார்க்கிறோம். இன்ப நாட்டமே, எதிர்பார்ப்பை நம்மிடம் கூட்டி வருகிறது. மனவேதனை இல்லாமலிருக்கவேண்டும் என்பதும் ஓர் இன்பநாட்டமே.

இன்ப நாட்டம் எதிர்ப்பார்ப்பை அழைத்து வருகிறது. எதிர்பார்ப்பு இன்பத்தோடு சேர்த்து துன்பத்தையும் அழைத்து வந்துவிடுகிறது. மனவேதனையையும் கொண்டு வந்துவிடுகிறது.

மத-ஆன்மீக நூலோர் இதையே சுவர்க்கம், நரகமென்று விவரிக்கின்றனர். இன்ப அனுபவங்களை - மகிழ்ச்சியை சுவர்க்கமென்று கூறுகின்றனர்.

துன்பத்தை - மனவேதனையை நரகமென்று கூறுகின்றனர்.

“இன்பம் இல்லாமலிருந்தாலும் பரவாயில்லை, துன்பம் இல்லாமலிருந்தால் போதும்; மனவேதனை இல்லாமலிருந்தால் போதும்.”

- இப்படி இரண்டையும் புறக்கணிக்கும் நிலையைத்தான் முக்தி என விவரிக்கின்றனர்.

இன்பம் என்பது என்ன? துன்பம் என்பது என்ன? எதிர்பார்ப்பு என்பது என்ன?

இன்பம் என்பது ஓர் உணர்வு. அதுபோல் துன்பம் என்பதும் ஓர் உணர்வே. சில அனுபவங்கள் இன்பமாக உள்ளன. சில அனுபவங்கள் துன்பமாக உள்ளன. இரண்டு விதமான அனுபவங்களும், உணர்வாகவே வெளிப்படுகின்றன.

எதிர்பார்ப்பு - ஆசை என்பது உணர்வா? எதிர்பார்ப்பு என்பது உணர்வல்ல. ஆசை என்பது உணர்வல்ல. உணர்வுகளின் மீது கொள்ளும் ஈடுபாடுதான் எதிர்பார்ப்பு; ஆசை. இன்பம் என்பது உணர்வு. இன்பத்தின் மீது கொண்டுள்ள ஈடுபாடுதான் எதிர்பார்ப்பு - ஆசை.

இன்பம் என்பது ஓர் அனுபவம். எதிர்பார்ப்பு - ஆசை என்பது ஓர் அனுபவமன்று.

இன்பம், வேதனை ஆகியவை நமது உணர்வு சம்பந்தப்பட்டவையாகும். அவை யாவும், நமது உணர்வில் - Consciousness ல் ஏற்படும் உணர்ச்சிகளாகும் - அனுபவங்களாகும்.

எதிர்பார்ப்பு என்பது உணர்ச்சியோ, அனுபவமோ அன்று. அது நமது அறிவில் - Intellect ல் ஏற்படும் முடிவு - தேர்வு ஆகும்.

நமது **உணர்வு** என்பது ஓர் ஆதாரநிலை. அதுவும் அனுபவமன்று. அந்த ஆதார உணர்வை உணரவோ அனுபவிக்கவோ முடியாது. அதுதான் உணர்வுநிலை; ஆதாரநிலை.

அந்த ஆதாரத்தில் ஏற்படும் உணர்ச்சிகளை மட்டுமே உணரமுடியும். உணர்ச்சிகள் மட்டுமே அனுபவம் ஆகும்.

நமது உணர்ச்சிகள் அனைத்தும், ஆதாரமாக இருக்கும் **உணர்வு** நிலையில் உருவாகும் சக்தி நிலை - Energy field களாகும்.

இன்பம் என்பது ஒரு சக்தி நிலை. துன்பம் என்பதும் ஒருவித சக்தி நிலையே.

நமது ஒவ்வொருவிதமான உணர்ச்சிகளும் ஒவ்வொரு விதமான சக்தி நிலையே.

நம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான மன இயல்பு - மனப்பதிவுகள் உள்ளன.

நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு, நமது இயல்பு

நமது உணர்வு நிலையில் ஒருவித சக்தி இயக்கத்தை ஏற்படுத்துகின்றது.

இதனையே உணர்ச்சியாக நாம் உணர்கின்றோம்.

இவை அனைத்தும் ஒவ்வொரு விதமான சக்தி நிலையே- Energy field மட்டுமே.

ஒவ்வொரு மனிதரும் இப்படி ஒவ்வொரு கணத்திலும்

ஏதாவது ஒரு சக்திநிலையின் வெளிப்பாட்டையே அனுபவம் செய்து வருகிறார்.

நாம் ஏதாவது ஓர் அனுபவத்தில் இருக்கிறோமென்றால்

நாம் ஏதாவது ஒரு சக்தி நிலையின் வெளிப்பாட்டை உணர்ந்து கொண்டிருக்கின்றோம் என்பதுதான் பொருள்.

இன்பமான அனுபவம் நமக்குப் பிடித்திருக்கிறது. அதுவும் ஒரு சக்தி நிலையின் வெளிப்பாடே.

துன்பமான அனுபவம் நமக்குப் பிடிக்கவில்லை. அதுவும் ஒரு சக்தி நிலையின் வெளிப்பாடே.

இன்ப உணர்வின்போது நாம் நம்மை மறந்து விடுகிறோம். துன்பநிலையின் போது, நாம் அதனை மாற்றியமைக்கப் போராடுகிறோம்.

போராட்டம் என்றால் என்ன?

நமக்கு ஏற்படும் சக்தி நிலையை, நமது விருப்பத்துக்கு ஏற்ற வகையில் மாற்றியமைக்க முயல்வது தான் போராட்டமாகும்.

இன்பங்கள் நம்மைப் போராடத் தூண்டுவதில்லை.

ஆனால் இன்பத்தை நாடும் போக்குதான் நம்மை போராடத் தூண்டுகின்றது.

சராசரி மனிதரும் சக்தி நிலையை மாற்றியமைக்கப் போராடுகிறார்; ஆன்ம சாதகரும் சக்தி நிலையை மாற்றியமைக்கப் போராடுகிறார்.

சராசரி மனிதரைப் பொறுத்த அளவில் தனது பிரச்சினைகளுக்கெல்லாம் காரணம் தனது சூழ்நிலைதான் என்ற முடிவுக்கு வருகிறார். அதனால் சூழ்நிலையைச் சீரமைக்கப் போராடுகிறார்.

ஆன்மிக சாதகரைப் பொறுத்த அளவில் தனது பிரச்சினைகளுக்குக் காரணம் தனது மன இயக்கமே என்ற முடிவுக்கு வந்து தனது மன இயக்கத்தைச் சீரமைக்கப் போராடுகிறார்.

மன இயக்கத்தைச் சீரமைப்பது என்றால் என்ன?

புறச்சூழ்நிலையைச் சீரமைக்காமல் அக உணர்வுகளை மட்டும் - அகத்தில் தோன்றும் உணர்ச்சிகளை மட்டும் - சக்தி நிலைகளை மட்டும் சீரமைப்பதாகும்.

அதை எவ்வாறு சீரமைப்பது?

அகத்தைச் சீரமைக்கும் நோக்கில்தான் தவ - தியான முயற்சிகள் அனைத்தும் கொடுக்கப்பட்டுள்ளன.

நமக்குக் கொடுக்கப்படும் தியான முயற்சிகள் இரு வகையாக அமைக்கப்பட்டுள்ளன.

இதில் ஒன்று : சுத்தப்படுத்தும் சிகிச்சைமுறை. இரண்டாவது : சக்தி நிலையை உருவாக்கி மேம்படுத்தும் முறை.

சுத்தப்படுத்தும் சிகிச்சை முறை - Therapy யும் ஒரு தியானமாகவே அமைத்துக்கொடுக்கப்படுகிறது.

இன்ப உணர்ச்சியின்போது எவரும் பிரச்சினை உள்ளவராக இருக்கமாட்டார்.

துன்பத்தின்போதுதான் ஒருவர் பிரச்சினையுள்ளவராகவும், போராட்டமுள்ளவராகவும் மாறிவிடுகிறார்.

அந்நிலையில் சிகிச்சை முறை தியானம் தேவைப்படுகிறது. சிகிச்சை முறை தியானம் என்பது என்ன?

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளை அப்படியே ஏற்றுக்கொள்வதுதான் இந்த தியானம்.

நமக்கு பயமோ, வருத்தமோ, கோபமோ ஏற்பட்டு அது நமக்குள் ஒரு உணர்ச்சிச் சூழலை ஏற்படுத்திச் சுழன்று கொண்டிருக்கும்போது நாம் அந்த உணர்ச்சியை

எதிர்ப்பு எதுவும் செய்யாமல் உணர்ந்து வருவோமானால் - இதுவே சுத்தப்படுத்தும் தியானம்.

இதுவே சிகிச்சை முறை தியானம்.

இந்நிலையில் நமது உணர்ச்சிகளின் இறுக்கம் தளர்ந்துவிடுகின்றது. சுழலாக இருந்த அவற்றின் இயக்கம் மென்மையடைந்து, நளினமான ஆறாக ஓட ஆரம்பிக்கின்றது.

தியானத்தின் இன்னுமொரு நிலைதான் சக்தி நிலையை உருவாக்கி மேம்படுத்துவது.

நாமாக முயன்று சக்தி நிலையை உருவாக்குவது தான் இது. ஆனால், நம் மனம் அமைதியாக இருக்கும்போது தான் இத்தகைய சக்தி நிலையை நமது தியானத்தின் மூலம் உருவாக்கமுடியும். நம் மனம், போராட்டத்தின் பிடியில் இருக்கும் போது இத்தகைய பிரத்தியேகமான சக்திநிலையை உருவாக்குவது கடினம்.

அது என்ன பிரத்தியேகமான சக்தி நிலை?

What is this different kind of Energy Field?

நமக்குள் சில உணர்வு நிலைகளை உருவாக்குவதுதான் இது.

அது என்ன உணர்வு நிலை?

சிலர் இரு கண்புருவங்களின் மையத்தைக் கவனிக்கின்றனர். சிலர் 'நான்' என்னும் தன்னுணர்வைக் கவனிக்கின்றனர். சிலர் இரண்டு சிந்தனைகளுக்கு இடையேயுள்ள இடைவெளியை கவனிக்கின்றனர். சாட்சிநிலை, அமைதி உணர்வு, உணர்வில் மையங் கொள்ளுதல் - இப்படி ஏதோ ஒரு நிலையில் தங்களது கவனிக்கும் உணர்வை இணைக்கின்றனர்.

இதன்மூலம் சில சக்தி நிலைகள் உருவாகின்றன. அந்த சக்தி நிலைகள் அனைவருக்கும் ஒன்றுபோல் இருக்காது.

அவற்றிலுங்கூட நபருக்கு நபர் மாறுபட்டிருக்க வாய்ப்புண்டு.

இதனால் சிலருக்கு அமைதியை உணரும் தன்மை ஏற்படும். சிலருக்கு உணர்வு நிலையின் அசைவற்ற தன்மை புலப்படலாம். சிலருக்கு இது ஆனந்த அனுபவத்தைக் கொடுக்கலாம். சிலருக்கு அஹம் ஸ்புரனை எனும் ஸ்புரிக்கும் உணர்வு ஏற்படலாம்.

- இவை அனைத்துமே சக்தி நிலைகளேயாகும்.

இந்த சக்தி நிலையை ஒருவர் வெற்றிகரமாக உருவாக்குவாரேயானால்

அந்த சக்தி நிலையினுள் அவரால் நிம்மதியாகவும் பாதுகாப்பாகவும் இருந்துகொள்ள முடியும்.

இது, கடுங்கோடையிலும், குளிரூட்டப்பட்ட அறையினுள் வெம்மை தெரியாதவாறு இருப்பதைப் போன்றதே.

இத்தகைய சக்தி நிலையின் பாதுகாப்பில் நாம் இருக்கும் வரையிலும்

எந்த ஒரு மோசமான உணர்ச்சிகளாலும் நம்மைத் தாக்கி நமக்கு வேதனையை ஏற்படுத்திவிடமுடியாது.

பயம் ஏற்படக்கூடிய சூழ்நிலையிலும் நமக்கு பயம் ஏற்படாது. துயரம் ஏற்படக்கூடிய சூழ்நிலையிலும் துயரம் ஏற்படாது. கோபம் ஏற்படக்கூடிய சூழ்நிலையிலும் கோபம் ஏற்படாது.

இவை அனைத்துக்கும் காரணம்

நாம் உருவாக்கிய சக்தி நிலையேயாகும்.

ஆனால் இந்த சக்தி நிலையை நம்மால் நிரந்தரமாகக் கையகப்படுத்தமுடியாது.

நாம் சிரமப்பட்டு உருவாக்கிய சக்திநிலை, வெகு விரைவில் தாமாகவே கலைந்து மறைந்துவிடும்.

நமது தீவிர வைராக்கியத்தின் காரணமாக அந்த சக்தி நிலையை நாம் ஒருவேளை தக்க வைத்துக் கொள்ள முடிந்தால் - அதன் தொடர் இயக்கத்தை

நமது உடலால் கூட தாங்கிக்கொள்ள முடியாது.

நாம் பாடுபட்டு உருவாக்கிய சக்திநிலை நமது உடல் நலத்தையே அழித்துவிடும்.

அதனை ஓர் அளவோடு வைத்துக்கொண்டால் நமது உடல் நலத்தைக்கூட காப்பாற்றிக் கொடுக்கும்.

இதுதான் சக்தி நிலை. இதுதான் Energy field.

இதுதான் மனோ லய நிலை.

முக்தி நிலை என்பது என்ன? சக்தி நிலைக்கும் முக்தி நிலைக்கும் என்ன தொடர்பு?

முக்தி என்பது ஒரு நிலையல்ல. ஒரு பேச்சுக்காக மட்டுமே அதனையும் ஒரு நிலை என்று குறிப்பிடுகிறோம்.

அதனுடைய தன்மையைக் குறிப்பிட ஏதாவது ஒரு வார்த்தையை உபயோகித்தாக வேண்டியது உள்ளது. தேங்கி நிற்கும் தண்ணீரை குளம் என்று கூறி விடலாம்.

குளத்தை - குளத்தின் தன்மையை விவரித்துவிடலாம். அதற்கு நிரந்தரமான ஓர் அமைப்பு உள்ளது. ஆனால் குளம் வேறு; ஆறு வேறு.

ஆறு என்பது கணந்தோறும் புதிதானது. அங்கு நிரந்தரமான அமைப்பு என எதுவும் கிடையாது.

சக்தி நிலையின் பிரவாகமே முக்தியாகும்.

நமது உணர்ச்சிகள் அனைத்தும் சக்தி நிலைகளே. அவை அனைத்தும் தோன்றுவதும், ஓடி மறைவதுமாக உள்ளன. நமது உணர்ச்சிகளைச் சீரமைக்க நாம் எதுவுமே செய்யாத நிலையில்

அனைத்து சக்தி நிலைகளுமே முக்தி நிலையாகப் பிரவகித்து விடுகின்றன.

முக்தி நிலை என்பது ஓர் அனுபவமா?

அது ஓர் அனுபவமல்ல; அது அனுபவங்களின் பிரவாகம்.

அனுபவங்கள் அனைத்தும் சக்தி நிலையே. அவை எவ்வளவு உயர்வானதாக இருந்தாலும் சரி அவை அனைத்தும் தோன்றி மறையவேண்டியவையே.

பலர் மெய்ப்பொருளையும் ஓர் அனுபவமாகக் கருதி விடுகின்றனர். இதனாலேயே மெய்ப்பொருளையும் அனுபவித்து அறியவேண்டும் எனக்கூறிவிடுகின்றனர்.

அனுபவங்கள் அனைத்தும் வெளிப்பாடுகளே.

ஆதார நிலை என்பது - Consciousness என்பது அதன் மூல நிலையில் எந்த வெளிப்பாடும் இல்லாமல் தன்னில் தானாகவே உள்ளது.

அதனை அறிவது என்பது சாத்தியமில்லை.

வெளிப்பாடுகளை மட்டுமே நம்மால் அறியமுடியும்.

சிலர் மெய்ப்பொருளைக்கூட அறிந்துவிட்டதாகக் கூறிவிடுவார்கள்; அனுபவித்து அறிந்து கொண்டிருப்பதாகக் கூறிவிடுவார்கள்.

'நான்' என்னும் அஹம் ஸ்புரனை அனுபவத்தைக்கூட சிலர் மெய்ப்பொருள் அனுபவம் என்று கூறிவிடுவார்கள்.

மெய்ப்பொருள், தன்னை நான் என்று ஸ்புரித்துக்கொண்டிருப்பதில்லை.

நமது உடல், உணர்வோடு இருந்தாலும் அது தன்னை காட்டிக் கொள்வதில்லை. அது உணர்வோடு இருந்தாலும் உணர்வற்றே இருக்கிறது.

நம் உடலின் எந்த ஒரு பகுதியிலாவது நாம் நமது கவனத்தைச் செலுத்தி

அதில் ஓர் அதிர்வை ஏற்படுத்துவோமாயின் அந்தப் பகுதியில்

ஓர் உணருந்தன்மை உருவாகிவிடும்.

இது ஒரு வெளிப்பாடே. உடல் உணர்வென்பது வெளிப்பாடற்ற ஒரு நிலையே.

இதுபோல் மெய்ப்பொருள் அனுபவம் என்று, தனிப்பட்ட அனுபவம் எதுவும் கிடையாது.

அனைத்து அனுபவங்களும்

சில காரணங்களினால் ஏற்பட்ட வெளிப்பாடு மட்டுமே.

ஒருவர் ஆகாயத்தை உற்றுப் பார்க்கிறார் என வைத்துக்கொள்வோம். ஆகாயத்தைப் பார்த்த அவர் கூறுகிறார்:

"நான் ஆகாயத்தைப் பார்த்துவிட்டேன். ஆகாயம் நீல நிறமாக இருக்கிறது".

அவர் கூறியதில் பொய் கிடையாது. அவர் நீல நிறத்தை அனுபவித்துப் பார்த்துள்ளார். அது அவருடைய நிதர்சனமான அனுபவம்.

உண்மையில் ஆகாயத்துக்கு நிறமே கிடையாது.

நிறமாகத் தோன்றியது பார்த்தவரின் பார்வை சக்தியின் முடிந்த நிலையே; ஒரு பிரதிபலிப்பு உணர்வே. அதற்கும் ஆகாயத்திற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது.

முக்தி நிலை என்பது ஓர் அனுபவமன்று. அது ஓர் உயர்நிலை அனுபவமும் கிடையாது.

நமது மன உணர்ச்சிகளின் நிரந்தரப் பிரவாகமே முக்தி நிலையாகும்.

நம் மனோ இயக்கத்தின் இயல்பான நிலையே முக்தி நிலைதான்.

முக்தி நிலையில்

நம் மனோரீதியான அனைத்துப் பிரச்சினைகளும் தாமாகத் தீர்வடைகின்றன.

நாமாக உருவாக்கிய நிலை எதுவாயினும் அது முக்தியல்ல; அது சக்தி நிலையே.

நாமாக உருவாக்குவது என்பது, ஒருவித சக்தி நிலையை இன்னுமொரு விதமான சக்தி நிலையாக மாற்றியமைப்பதே.

சமாதி நிலை என்ற பெயரிலோ அல்லது சகஜ சமாதி என்ற பெயரிலோ ஆதாரமான உணர்வு நிலையை அனுபவித்துவிடமுடியாது.

நாம் அனுபவிப்பது அனைத்தும் அந்த ஆதார நிலையின் வெளிப்பாடே.

வெளிப்பாடுகள் அனைத்தும் பிரவகித்து மறைந்துவிடவேண்டும்.

சக்திநிலையில் ஏற்படும் பிரச்சினையான உணர்வுகளும்கூட தாமாகவே தீர்வு பெற்றுவிடுகின்றன.

சக்திநிலையை மாற்றியமைக்க முனையுந்தோறும்

எதிர்பார்ப்பு அம்சமும் உயிர்பெற்றுவிடுகிறது.

சக்திநிலை சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் கிடையாது என்பதை

அறிவுப் பூர்வமாகப் புரிந்து கொள்ளும்போது

நமது புரிதல் மட்டுமே செயல்படுகிறது.

நமது சக்தி நிலை எதிர்பார்ப்பற்று இயங்குகிறது.

சக்தி நிலை அனைத்தும் இயல்பாகத் தோன்றி இயல்பாக மறைகின்றது.

ஒவ்வொரு சக்தி நிலையையும், அடுத்து வரும் சக்தி நிலை

அனுபவிக்கவோ

புறக்கணிக்கவோ

- முனைவதில்லை.

இணைந்தே பிரவகிக்கிறது. ஆறாகப் பிரவகிக்கிறது.

துயரம் என்பது ஒரு சக்தி நிலை.

அதனை அடுத்து என்ன வருகிறது?

வேதனை என்னும் பாதிக்கப்பட்ட உணர்வுதான் அதனை அடுத்து வருகிறது.

அந்த வேதனை உணர்வானது துயரத்தை மாற்ற முனைந்தால் அங்கு முரண்பாடு தோன்றுகின்றது.

சக்தி நிலையோடு சக்தி நிலை முரண்படும் நிகழ்வு ஏற்படுகின்றது.

சக்திநிலைகள் அனைத்தும் முரண்பாடு இல்லாமல் ஒன்றன்பின் ஒன்றாக இணைவதுதான் பிரவாக நிலை.

இணைவது என்பது Enjoying அல்ல.

- Enjoining with life Energy.



## ?கேள்வி பதில்

கேள்வி : பகவத் ஐயா அவர்களின் ஞானத்தெளிவை புரிந்துகொண்டதால், அகத்தில் முரண்படுவதில்லை. ஆனால் என் குடும்ப உறுப்பினர்களிடம் விவாதிக்கும்போது அவர்களுடன் முரண்பாடு ஏற்பட்டுவிடுகிறது. எவ்வாறு முரண்பாட்டை தவிர்ப்பது? மேலும் எனது குழந்தைகளின் நலனுக்காக செயல்படுவதை அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. எவ்வாறு புரிய வைப்பது?

பதில் : ஒரு அன்பர் தனக்கு ஏற்பட்ட நடைமுறை பிரச்சினையைக் கூறினார். எனக்கு மனத்தெளிவைப் பற்றி பகவத் ஐயாவின் புத்தகம் வழியாக நன்றாகப் புரிந்துகொள்ள முடிகிறது. நன்றாகப் புரிந்து கொண்ட பிறகும் நடைமுறை வாழ்க்கையில் குழந்தைகள், குடும்ப உறுப்பினர்கள், நண்பர்கள் என மற்றவர்களுடன் இணைந்து செயல்படும் போது எனக்கே தெரியாமல் சில நேரங்களில் அவர்கள் மனம் வருத்தப்படும்படி பேசிவிடுகிறேன். பிறகு இப்படிப் பேசியது தவறு என்பதும் புரிகிறது. சில நேரங்களில் குடும்ப உறுப்பினர்களின் நன்மைக்காகவும், அக்கறைக்காகவும் நான் செயல்படுவதைக் கூட அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. குடும்ப உறுப்பினர்களுக்கு எப்படிப் புரிய வைப்பது? எனக் கேட்டார்.

அகத்தெளிவைப் பொறுத்தவரையில் நம் மனதின் இயலாமையை நாம் மட்டும் புரிந்து கொண்டாலே போதும். நமது கவனத்திற்கு வராத அனைத்தும் அகம். நமது கவனத்திற்கு வந்தபிறகு, அதை நாமாக எடுத்து – சிந்திப்பதும், செயல்படுத்துவதும் புறம் ஆகும். மேற்சொன்னவைகளைச் செயல்படுத்த யாருடைய உதவியும் தேவையில்லை. நாம் நன்றாக புரிந்துகொண்டால் மட்டும் போதும்.

நடைமுறை வாழ்க்கையில் நாம் ஒவ்வொருவரும் ஒரு குடும்ப அமைப்பின் உறுப்பினராக இருக்கிறோம். (அம்மா, அப்பா, அண்ணன், தம்பி, தங்கை, அக்காள் என்று) குடும்பத்தில் நாம் ஒவ்வொருவருடனும் இணைந்து செயல்பட வேண்டியுள்ளது. ஒவ்வொருவருக்கும் ஓர் இயல்பு உண்டு. அவர்களின் இயல்புடன் அவர்களை அப்படியே ஏற்றுக்கொண்டு நாம் செயல்படும்போதுதான் புற வாழ்க்கையை மகிழ்ச்சியாகவும், நிறைவாகவும் அமைத்துக்கொள்ளமுடியும்.

உதாரணமாக பகவத் ஐயாவின் புரிதலுக்கு முன் நான், என்னுடைய குடும்ப உறுப்பினர்களுடன் ஆன்மிகக் கருத்து, உடல் நலன் பற்றிய கருத்து, மற்றவர்களைப் பற்றிய பொதுவான கருத்து என பலவற்றையும் பேசுவது வழக்கம். குடும்ப உறுப்பினர்கள் அவர்களுக்குத் தெரிந்த கருத்தைப் பேசுவார்கள். நானும், அவர்களும் பேசிப் பேசி, என்னுடைய கருத்துதான் சிறந்தது என நான் வலியுறுத்த, அவர்கள் கருத்துதான் சிறந்தது என அவர்கள் வலியுறுத்த வாக்குவாதத்தின் உச்சத்திற்குச் சென்று, இனி பேசுவதால் எந்தப் பயனும் இல்லை என முடித்துக்கொள்வோம்.

இந்த நிலையில்தான் நான் ஒன்றை நன்றாகப் புரிந்துகொண்டேன். நம்முடைய கருத்துகளை அவர்கள் அப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டிய கட்டாயம் அவர்களுக்குக் கிடையாது. அவர்கள் அவர்களுடைய இயல்புப்படி தான் இருப்பார்கள். அவர்கள் நினைத்தபடி நானும் இல்லை என்பதும் புரிந்தது. அதன் பிறகு வாழ்க்கையில் யாரையும் மாற்றமுடியாது என்பதைத் தெரிந்துகொண்டேன்.

பொதுவாக எல்லோரையும் அவர்களின் இயல்புடன் ஏற்றுக்கொள்ளும்போது பெரும்பாலும் பிரச்சினைகள் நமக்கு ஏற்படுவதில்லை. கொஞ்ச நாட்களில் நானாக என் கருத்தை எடுத்து வலியுறுத்திப் பேசுவதை விட்டுவிட்டேன். நான் பேச வேண்டாம் என நினைத்து பேசாமல் இருப்பதில்லை. விவாதிப்பதால் எந்த முன்னேற்றமும் இல்லை என்பதால் தேவையில்லாமல் பேசுவதைத் தவிர்த்து வந்தேன்.

நாட்கள் செல்லச் செல்ல மற்ற குடும்ப உறுப்பினர்கள் அவர்களுக்குள் தங்கள் கருத்துகளைப் பேசி வாதத்தின் உச்சத்திற்குச் சென்று வேறு வழி தெரியாமல் முடித்துக் கொள்வதைப் பார்த்தேன். நான் அமைதியாக அவர்களின் வாதத்தைக் கேட்பதோடு சரி, நானாக எதுவும் பேசுவது கிடையாது. இப்போதெல்லாம் நானாக ஏதாவது ஒரு நல்ல கருத்தைப் பேசும்போது எல்லோரும் ஒன்றாகக் கவனிக்கிறார்கள்.

மற்றவர்கள் பேசும்போது நாம் காதுகொடுத்துக் கேட்டால் மட்டுமே போதும். எந்தக் கருத்தும்கூட நாம் கூறத்தேவையில்லை. அவர்கள் பேசுவதற்கு வாய்ப்பு கொடுத்து அமைதியாகக் கேட்டாலே, அவர்களிடம் இருக்கும் மன எழுச்சி குறைந்துவிடும். பிறகு தேவை என்றால் அவர்களுக்கு ஏதாவது சில நல்லக் கருத்துகளைக் கூறலாம். அதையும் அவர்கள் அப்படியே செயல்படுத்தவேண்டும் என்று நாம் எதிர்பார்க்கக்கூடாது. சில நாட்களில் அவர்களின் பல்வேறு பிரச்சினைகளுக்கும், தீர்வுகளுக்கும் நம்மைக் கலந்து ஆலோசித்து அவர்கள் ஒரு நல்ல முடிவுக்கு வருவதற்கு இது வாய்ப்பாக அமையும்.

என்னுடைய மகன் T.V.யை அதிகமாக பார்ப்பதும், T.V.யின் அருகில் சென்று பார்ப்பதும் வழக்கமாகி இருந்தது. அவனுடைய கண்கள் கெட்டுவிடக்கூடாது என்பதில் உள்ள அக்கறையினாலும், அவன் மீது உள்ள அன்பினாலும், T.V.பார்க்காதே,T.V.பார்க்காதே எனத் திரும்பத் திரும்பக் கூறிவந்தேன். அவன் கேட்பதாக இல்லை. பிறகு கண்டித்தும் பார்த்தேன். அதனால் நான் வீட்டில் இருக்கும்போது அவன் T.V. பார்ப்பதில்லை. நான் Office சென்றபிறகு T.V. பார்ப்பதும், நண்பர்கள் வீட்டிற்கு சென்று பார்ப்பதுமாக நடந்துகொண்டிருந்தது. ஒரு நாள் "இன்று T.V.யில் எனக்குப் பிடித்த படம் இருக்கிறது; அப்பா வெளியே சென்றுவிட்டால் பார்க்கலாம்" என்று அவன் கூறியது எனக்கு நன்றாகக் கேட்டது.

நான் Office சென்று பொறுமையாகச் சிந்தித்துப் பார்த்தேன். எனக்கும் என்னுடைய மகனுக்கும் இடையே நெருக்கம் குறைந்துள்ளது என்பதை நன்றாக உணர்ந்தேன். அவன் என்னைத் தேடுவதும், எதிர்பார்ப்பதும் இல்லை. மேலும் அவன் என்னுடன் மகிழ்ச்சியாக எதையும் பேசுவதும், பகிர்ந்து கொள்வதும்கூட இல்லை என்பதைப் புரிந்துகொண்டேன். இதற்கு ஏதாவது ஒரு தீர்வை நான்தான் செய்ய வேண்டும் என முடிவு செய்துவிட்டேன்.

ஒரு நாள் ஞாயிற்றுகிழமை எனது மகனை அழைத்துக்கொண்டு ஒரு C.D. கடைக்கு சென்று அவனுக்குப் பிடித்த ஆங்கிலப் படம் ஒன்றை எடுக்குமாறு கூறினேன். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. நம்முடைய அப்பாதானா என திரும்பத் திரும்பப் பார்த்தான். மேலும் அவனுக்குப் பிடித்த Snacks சிலவற்றையும் வாங்கி வந்து, நானும் அவனும் மட்டும் அந்த ஆங்கிலப் படத்தை முழுவதுமாகப் பார்த்தோம். எனக்கு அந்தப் படத்தில் பெரிய ஆர்வம் இல்லை. இருந்தபோதும் எனது மகனின் விருப்பத்திற்காகப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவனும் சிறிது நேரத்திற்கு ஒருமுறை இது உண்மைதானா, உண்மைதானா எனப் பார்ப்பது எனக்கு நன்றாக புரிந்தது.

சில நாட்களில் அவனும் என்னுடன் எல்லா விஷயங்களையும் பகிர்ந்து கொள்ளும் பழக்கம் ஏற்பட்டது. என்னுடைய அருகாமை அவனுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. இப்போது நானும் அவனுக்காக இறங்கி, அவனுக்குப் பிடித்த சில விஷயங்களை கையில் எடுத்துள்ளேன். இப்போதெல்லாம் T.V.யை அருகிலிருந்து பார்க்காதே கண்கள் கெட்டுவிடும் என்பதை கூறும்போது அவனும் கேட்டுக்கொள்கிறான். மேலும் ஒரு கேள்வியைக் கேட்டான், "எனக்கே தெரியாமல் T.V.பார்ப்பதில் ஆர்வமாகி T.V.யின் அருகில் சென்றுவிடுகிறேன். நான் என்ன செய்வது?"

நான் பொறுமையாக கேட்டுவிட்டு பிறகு கூறினேன். "உனக்கு தெரியாமல் T.V.க்கு அருகில் சென்று பார்ப்பதில் தவறு கிடையாது. T.V.க்கு அருகில் இருந்துதான் நீ பார்க்கிறாய் என்பது எப்போது உனக்குத் தெரிகிறதோ அப்போது நீ சற்று தூரமாக சென்று அமர்ந்து பார்த்தால் போதும்" எனக் கூறினேன். இப்போது சற்று முன்னேற்றம் அடைந்து வருகிறான்.

"நன்றாகப் பள்ளிப்பாடங்களைப் படித்த நிலையிலும் Exam ல் கேள்விகளுக்குப் பதில் தெரிந்திருந்தும் பதட்டத்தின் காரணமாக நன்றாகப் பதில் எழுத முடியவில்லை என்ன செய்வது?" எனக்கேட்டான். "Exam சமயத்தில் பதட்டம் ஏற்படுவது அனைவருக்கும் இயல்புதான். அதில் ஒன்றும் தவறு இல்லை. முதலில் உனக்கு நன்கு பதில் தெரிந்த கேள்விக்கு விடை எழுது. பிறகு சுமாராகத் தெரிந்த கேள்விகளுக்குப் பதில் எழுது. அவ்வளவு தான் நம்மால் எழுத முடியும்" எனக் கூறினேன். இப்போது பதட்டம் இல்லாமல் Exam ஐ எதிர்கொள்ள முடிவதாகக் கூறினான்.

அகத்தெளிவு என்பது நம்முடைய அகம் சார்ந்தது. புறத்தில் எல்லோரையும் அவர்களின் இயல்புடன் ஏற்றுக்கொண்டு, அகத்தெளிவு பெற்ற நாம் தான் சிறப்பாக நல்லமுறையில் செயல்படவேண்டும். அது நமது அடிப்படைக் கடமை ஆகும்.

அகத்தெளிவு பெற்று வெற்றிபெற்ற நாம், புறத்தில் செயல்படும்போது நிதானமின்மையால் சில தவறுகளைச் செய்து விடுகின்றோம்.

இது புலியிடம் வெற்றிபெற்று பூனையிடம் தோற்றுவிடுவதைப்போல் ஆகிவிடுகிறது.

புலியிடம் வெற்றிபெறுவது என்பது மிகவும் கடினம், அதாவது இது அக விடுதலையை குறிக்கிறது. பூனையிடம் தோற்பது என்பது மற்றவர்களின் இயல்பை ஏற்றுக்கொள்ளாமல் போராடித் தோற்றுப்போவதைக் குறிக்கிறது.

மற்றவர்களை அங்கீகரித்தும், அனுசரித்தும் ஏற்றுக்கொண்டு நாம் செயல்படுவதின் மூலம் நாம் நினைப்பதை மற்றவரோடு முரண்படாமல் சரியாகச் செயல்படுத்த முடியும்.

**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942-05880

## சந்தாவை செலுத்தாதவர்களுக்கு ஒரு வேண்டுகோள்

நமது வேண்டுகோளுக்கு இணங்க சந்தா செலுத்தியவர்களின் எண்ணிக்கை 624 ஆக உயர்ந்துள்ளது. ஒரு வருடம் சந்தா செலுத்தியவர்கள் தங்கள் சந்தாவை புதுப்பித்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கின்றோம். மேலும் சந்தா செலுத்தாதவர்கள் வருகின்ற ஏப்ரல் மாதம் 10-ம் தேதிக்குள் செலுத்தி தங்களுக்கு பாதை தொடர்ந்து வர உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

பின்வரும் ஏதாவது ஒரு வழியில் சந்தாவை செலுத்தலாம்.

1. சந்தா - ரூ. 100/- (1 ஆண்டு) ரூ. 200/- (2 ஆண்டு) ரூ. 300/- (3 ஆண்டு)
2. ஆயுள் சந்தா - ரூ. 1000/-

நன்கொடைகளை வழங்கி ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் பங்கெடுத்துக்கொள்ள விரும்புபவர்கள் பின்வரும் ஏதாவது ஒரு வழியில் உதவலாம்.

1. ஆண்டு நன்கொடை - ரூ. 1000/- (ஆண்டு ஒன்றுக்கு)
2. ஆயுள் நன்கொடை - ரூ. 10,000/-

நன்கொடை மற்றும் சந்தா அனுப்புபவர்கள் "Sri Bagavath Mission" என்ற பெயரில் சேலத்தில் செல்லதக்க Cheque, D.D. அல்லது M.O. ஆக அனுப்பலாம். அல்லது, HDFC, Car Street Branch, Salem, A/c. No. 15907620000075, IFSC : HDFC 0001590 என்ற எண்ணில் நேரடியாக செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் செல் : 9789165555 என்ற எண்ணில் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்
தலைமையகம், சேலம்.

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் "நீங்களும் ஞானியாகலாம்" என்ற தலைப்பில் 2-3-2013 அன்று சென்னையிலும், 10-3-2013 அன்று இராஜபாளையத்திலும் சிறப்புரை நிகழ்த்தினார்கள். சென்னையில் ஐயாவின் சிறப்புரையை ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம் ஏற்பாடு செய்திருந்தது. சென்னை மையத்தைச் சேர்ந்த அன்பர்கள் அனைவரும் ஐயாவின் ஞானத்தெளிவை தேடுதல் கொண்ட அனைவருக்கும் கொண்டு சேர்ப்பதில் மிகுந்த ஆர்வத்துடன் செயல்பட்டு வருகிறார்கள். மாதம்தோறும் வெவ்வேறு இடங்களில் ஐயாவின் சிறப்புரையை ஏற்பாடு செய்து அனைத்துப் பகுதி மக்களும் பயனடைய தொண்டாற்றி வருகிறார்கள். இப்புரிதலால் பயனடைந்து தொண்டாற்றும் ஆர்வம் உள்ள சென்னை அன்பர்கள் இவர்களோடு இணைந்து மேலும் இத்தொண்டு சிறக்க உதவுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

முதன்முறையாக இராஜபாளையத்தில் அரவிந்த் ஆஸ்ரமத்திலும், N.R.K. திருமண மண்டபத்திலும் ஐயாவின் சத்சங்கங்கள் நடந்தன. இப்புதிய முயற்சியை நமது நண்பர் திரு. சங்கர நாராயணன் அவர்கள் ஏற்பாடு செய்திருந்தார். இதில் மனவளக்கலையை சேர்ந்த அன்பர்கள், ஈஷா மையத்தை சேர்ந்த அன்பர்கள் எனப் பல ஆன்மிக அமைப்பைச் சேர்ந்த அன்பர்கள் கலந்துகொண்டு பயனடைந்தனர். பகவத் ஐயா கொடுப்பது மனதின் இயக்க உண்மையை புரிந்து கொள்ளும் புரிதல் மட்டுமே. இந்த உண்மை அனைவருக்கும் பொதுவானது. புரிந்துகொள்ளும் அனைவருக்கும் சொந்தமானது. இந்த புரிதலே விடுதலை என்னும் முக்தியைத் தரவல்லது. எனவே பல ஆன்மிக அமைப்பைச் சேர்ந்த அன்பர்களும் எந்தப் பாகுபாடும் இன்றி இத்தெளிவைப் பெற்று வருகிறார்கள்.

இதுவரை ஞானம் என்பதும் முக்தி என்பதும் ஓர் எட்டாக்கனியாக, அவ்வளவு எளிதில் அடையமுடியாத நிலையாக கருதப்பட்டு வந்தது. ஆன்மிகத் தேடலில் இருப்பவர்களில் லட்சத்தில் ஒருவரே இத்தெளிவைப் பெற்று விடுதலை அடைந்திருந்தனர். அவ்வாறு விடுதலை அடைந்த ஞானிகள் மற்றவர்களுக்கு ஞானநிலையைப் பற்றி எடுத்துக்கூறி விளக்கும்போது கேட்பவருக்கு இந்நிலை மேலும் புதிரானதாகவும், புரியாத ஒன்றாகவுமே ஆகிவிடுகிறது. இதனாலேயே ஞானம் என்பது ஒரு புதிராகவும் கடினமானதாகவும் கருதப்பட்டுவருகிறது.

ஆனால் ஞானம் என்பது எளிதானதா அல்லது கடினமானதா?

எளிது, கடினம் என்பதெல்லாம் அவரவர்கள் அணுகும் முறையில்தான் இருக்கிறது. கடினமானதாக கருதப்படும் ஒன்றை சரியான முறையில் அணுகும்போது அது எளிதானதாகிவிடும்.

எளிதானதாகக் கருதப்படும் ஒன்றை சரியான முறையில் அணுகாவிட்டால் அது கடினமானதாகிவிடும்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் புதிய அணுகுமுறையில் ஞானம் எளிமையாக்கப்பட்டுவிட்டது என்று சொல்லிவருகிறோம்.

உண்மையில் இது புதிய அணுகுமுறையாக இருந்தாலும் கூட சரியான அணுகுமுறையாக இருப்பதால் மட்டுமே ஞானவிடுதலையே எளிமையானதாகிவிடுகிறது.

எனவே நாமும் பயன் பெறுவோம், அனைவரையும் பயன்பெற அழைப்போம்...

அன்புடன்,

K.S. ஜீவமணி, ஆசிரியர்,

செல் : 97891-65555

## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 31-03-2013 ஞாயிறு | S. A. திருமண மண்டபம், 1/22, நாயுடு தெரு, இராமாபுரம் பஸ் நிலையம் அருகில், வலசரவாக்கம்,சென்னை-87. | **கவலைகளுக்கெல்லாம் ஞானத்தின் வழியில் தீர்வு காணலாம்** மாலை 5-30 to 8-00 மணிவரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், செல் : 98840 97438, 99520 71525 |

## ஸ்ரீ பகவத் மிஷன் மையங்கள் :

★ ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்
23/10, Old Bank of Baroda Street,
Secretariate Colony, Ambattur, Chennai - 600 053.
Cell : 9884097438, 9952071525.

★ ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு, முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல்.
செல் : 9360579181, 9360110755, 9787253751

★ ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ்,
40, தட்டான் தோட்டம், 4-வது தெரு,
பல்லடம் ரோடு, திருப்பூர்-4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

★ ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் மையம்
அம்ருதா ஹோமியோ கிளினிக்,
8A/189, சரஸ்வதி தெரு, அத்வைத ஆஸ்ரமம் ரோடு,
புதிய பஸ் நிலையம் எதிரில், சேலம்-636 004.
செல் : 9488694453, 9894377433, 9443290559

★ ஸ்ரீ பகவத் மிஷன், P. ராஜவேலன், பூரணி கேஸ் ஏஜன்ஸி,
மாரியம்மன் கோவில் அருகில், அக்கூர் (Po.) மயிலாடுதுறை வழி,
நாகப்பட்டிணம்-609 801.செல் : 9150405092

## ஸ்ரீ பகவத் ஐயாவின் ஆனைக்கட்டி முகாம்

25-04-2013 முதல் 28-04-2013 வரை - இடம் : சத்தரிசனம்

வழி : கோவையிலிருந்து 45 கி. மீ. - ஆனைக்கட்டியிலிருந்து 11 கி. மீ. கோட்டத்தரா - வடக்கோட்டத்தரா - சத்தரிசனம்.
(Land Mark - காத்தாடி வீடு)

சத்தரிசனத்தில் கலந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள் முன்பதிவு செய்துகொள்ளுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கின்றோம்.

திரு. ஆனந்தகுமார் - 98422 31582

## ஜென் கதை பிரவாகம்

ஒரு நதியில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அதில் இரண்டு சிறு துரும்புகள் அடித்துச்செல்லப்பட்டு மிதந்தன.

ஒரு துரும்பு நதியில் குறுக்காக நின்று பிரவாகத்தைத் தடுக்க பெருமுயற்சி செய்தது. "மேலே போக விடமாட்டேன் இந்த நதியை!" என்று கூறிக்கொண்டே குறுக்கே படுத்துக்கொண்டு கறுவியது.

நதியின் வேகத்தினால் தாறுமாறாக அலைக்கழிக்கப்பட்டது. நதியின் போக்கில் மயிரிழை மாறுதல் செய்ய முடியாவிட்டாலும், "நதியை எப்படியாவது நிறுத்தியே தீருவேன். உயிரே போனாலும் இந்த நதியை அடக்கியே தீருவேன்" என்று அலறிக்கொண்டே திணறியது. பாவம், அடித்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்தது.

நதிக்கு அத்துரும்பின் குரல் கேட்கவும் இல்லை. அதன் இருப்பை நதி உணரவும் இல்லை.

மற்றொரு துரும்போ தன்னை அந்தப் பிரவாகத்தில் விட்டுவிட்டது. அது, நதியின் குறுக்காக அல்ல, நேராகக் கிடந்தது நதி போகும் திசையில் மிதக்க வசதியாக,

அதன் மனதில், தான் நதிக்கு இடையூறு செய்யாமல் இருந்தால் போதும் என்று முடித்துக்கொண்டது.

இந்த இரு துரும்பைப் பற்றியும் நதிக்குத் தெரியாது; துரும்புகளின் போக்கைப் பற்றியும் தெரியாது. நதிக்கு எந்த வித்தியாசமும் இல்லை. ஆனால் அந்தத் துரும்புகளுக்கு இருந்தது.

நதியுடன் ஓடும் துரும்பு, நதியின் ஓட்டத்துடன் ஓட்டமாக ஓடிக்கொண்டே இருந்தது.

நதியுடன் போராடும் துரும்போ வலியும், வேதனையும், துக்கமும் அலைக்கழிக்க உடலெல்லாம் ரணத்துடன் ஓடியது.

நதியை ஒன்று ஏற்றுக்கொண்டது; மற்றொன்று எதிர்த்து போராடியது.

"போராடினால் வலி; ஏற்றுக்கொண்டால் விடுதலை"



ஜென் கதை 'பிரவாகம்'

நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*




Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.

## அழகு என்றால் என்ன?

எது அழகு? எங்கே இருக்கிறது அழகு? பார்க்கும் பொருளிலா, இல்லை உங்கள் கண்ணிலா? அழகைப் பற்றிய உங்கள் கருத்தைத்தான் நீங்கள் பார்க்கும் பொருளின்மேல் சுமத்துகிறீர்கள். அங்கே ஒரு அழகான மாலைக் கதிரவனின் மறையும் காட்சி தென்படுகிறது. அது அழகாக இருக்கிறது என்று உங்களுக்குள் நீங்களே சொல்லிக் கொண்டால் கூட அதனை நீங்கள் உண்மையில் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. அழகு பொருளில் இல்லை; பார்க்கும் உங்கள் கண்களிலும் இல்லை; முற்றிலுமாய் நீங்களே அங்கே இல்லாத போதுதான் அது இருக்கிறது. எப்படி என்றால், அழகு என்பது என்ன? உண்மையில் யாருக்கும் தெரியாது. அழகை அனுபவித்து அதைச் சொல்வதற்கு உள்ளே யாருமே இல்லாத போது, உங்களது முழு இருப்பையும் ஒன்று நிரப்புகிறதே அதனை வேண்டுமானால் அழகு என்று சொல்லலாம். அனுபவிக்கும் ஒரு அமைப்பின் மூலம் எப்பொழுது அழகினை சிறைப் பிடிக்கிறீர்களோ அப்போதே அது தொலைந்து போகிறது.

**J. கிருஷ்ணமூர்த்தி**

(J.K.உடன் நடந்த உரையாடலில் இருந்து)